23rd August 1961]

THE HON. SRI P. KAKKAN : அந்த மாதிரி எவ்விதத் தகராறும் வரவில்லை. வந்தால் பார்க்கலாம்.

SRI K. B. S. MANI : கோட்டைப் பிள்ளைமார் எந்த எந்தப் பகுதியில் இருக்கிறார்கள் ? அவர்களுடைய பரம்பரைத் தொழில் என்ன ? ஜீவனத்திற்காக என்ன என்ன முறைகளைக் கையாண்டு வருகிறார்கள் என்று சொல்ல முடியுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஒரு காலத்தில் பெரிய நிலச்சுவாந்தார்களாக இருந்தார்கள் என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

SRI A. A. RASHEED : ஜனத்தொகை குறைவுக்குக் காரணம் அவர்களிடையே அதிகப் பெண்கள் இல்லை என்பதும் ஒன்றா ? (சிரிப்பு.)

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் கேள்விக்கு நான் எந்தவிதமான பதிலும் சொல்ல முடியாது இருக்கிறேன்.

DEPUTY SPEAKER: Questions are over.

*Note*—**An asterisk * at the commencement of a speech indicates revision by the member**].

### II.—CALLING ATTENTION TO THE FAILURE TO TAKE PREVENTIVE MEASURES AGAINST THE FLOODS IN THE CAUVERY.

DEPUTY SPEAKER : The hon. Member Sri M. Kalyanasundaram has given notice of a matter under rule 41. I think the hon. Member will read the notice.

SRI M. KALYANASUNDARAM : I wish to call the attention of the Hon. Minister for Public Works to a matter of urgent public importance, viz., failure of the Public Works Department to take adequate precautionary and preventive measures during the floods in the Cauvery in July 1961.

THE HON. SRI P. KAKKAN: கனம் சபாநாயகர் அவர்களே, இன்று காலையில் இதுபற்றி ஒரு ஸ்டேட்மெண்டு சபையில் வைக்கப்பட்டிருக்கிறது, 25-ந் தேதி இதுபற்றியே விவாதிக்க இருப்பதனால் அங்கத்தினர்களுடைய கருத்துக்களைத் தெரிந்து கொள்ளவும், அதற்கு நான் பதில் முழுமையாக அளிக்கிறபோது எல்லா விஷயங்களையும் கனம் அங்கத்தினர்கள் தெரிந்து கொள்ளவும் ஒரு வாய்ப்பு இருக்கிறது என்று சொல்லிக் கொள்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் தலைவர் அவர்களே, நான் என்னுடைய தீர்மானத்தில் போதுமான முன்னேற்பாடாக, பாதுகாப்பான நடவடிக்கைகளை வெள்ள சமயத்தில் மராமத்து இலாகா எடுத்துக்கொள்ளவில்லை என்பதைப்பற்றி குறிப்பிட்டேன். அவர்கள் என்ன என்ன செய்யத் தவறினார்கள், அல்லது செய்தார்கள் என்பதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் ரூல் 41-படி ஒரு ஸ்டேட்மெண்ட் வைத்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் இந்த மோஷனை அனுமதித்திருக்க வேண்டாம். சபையில் ஒரு ஸ்டேட்மெண்டு வைத்திருக்கிறேன் என்றால் அதில் நான் குறிப்பாகக் கேட்டுள்ள விஷயங்கள் இருக்கலாம், அல்லது இல்லாமலும் இருக்கலாம். இன்னும் அதைப் படிக்கவில்லை. ஆகவே தனியாக இதற்கு ஒரு ஸ்டேட்மெண்டு வைப்பதில் என்ன கஷ்டம்?

THE HON. SRI P. KAKKAN: எதிர்கட்சித் தலைவர்கள் எல்லோரும் ஒன்று கூடிப் பேசிய பின்னர்தான் இந்த ஏற்பாட்டுக்கு வந்துள்ளோம்.

DEPUTY SPEAKER : That is the reply of the Hon. Minister.

### III—GOVERNMENT MOTION.

### TRANSACTION OF GOVERNMENT BUSINESS ON A NON-OFFICIAL DAY.

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, I move—

" That rule 23 of the Madras Legislative Assembly Rules be suspended and the House do transact Government Business on Thursday, the 24th August 1961."

The motion was put and carried.

### IV.—GOVERNMENT BILL.

### THE MADRAS CO-OPERATIVE SOCIETIES BILL, 1961 (L.A. BILL NO. 22 OF 1961) AS AMENDED BY THE SELECT COMMITTEE—*cont.*

9-30 a.m. DEPUTY SPEAKER : Now let us proceed with the Madras Co-operative Societies Bill. We will take up clause 64, Chapter VIII.

*Clause* 64.

DEPUTY SPEAKER : The question is—

' That clause 64 do stand part of the Bill.'

SRI M. KALYANASUNDARAM : இது ஆடிட், என்கொயரி, இன்ஸ்பெக்ஷன் முதலியன சம்பந்தமான ஒரு பகுதி. பழைய சட்டத்திலே பிரபல்யமாக இருந்த 38-வது பிரிவு இப்பொழுது 65-வது பிரிவாக இந்த மசோதாவில் உருவாகியிருக்கிறது. இதற்கு முன்னதாக வருஷா வருஷம் செய்யவேண்டிய ஆடிட் முறையாக நடை பெறவேண்டும். இதிலே ஒரு காலம் குறிப்பிடப்பட வேண்டும் என்பது என்னுடைய அபிப்பிராயம். ஆடிட் முடிவு பெறுவதற்கு ஒரு காலவரையரை இல்லாமல் இருக்கிறது.